உ

கணபதிதுணை.

திருச்செந்தூர்க்

# குமரேசர் ஆசிரிய விருத்தம்.



இது

பெரியகுளம்

கருவை • சங்கரலிங்கம்பிள்ளை

இயற்றியது.

சென்னை:

மத்ராசு ரிப்பன் அச்சுக்கூடம்.



துர்முகி௵

தைமீ.

கணபதிதுணை.

# திருச்செந்தூர்க் குமரேசர் ஆசிரிய விருத்தம்.

காப்பு.

திருவார்திரைக்கடல்சூழ்செந்திற்பதிவாழ்
பொருசூர்களைகுமாற்போற்ற - இருசீரும்
வேண்டியவாறுநல்கும் வேழமுகன்முத்திநெறி
தூண்டியசெங் தாளே துணை.

---

பொங்கார்வ யெழுமிரவி விரிகிர ணப்ந்தியிற் பொ லியுநவ ரத்ன முடியும் - பூசுதிரு நீற்றோடு திலகமணி நெற்றியும் புன்னகைப் பவளவாயும், தொங்குபல கனி விரிந்தொழுகுதே னருவிபோற் றூயவிரு கருணைவிழி யும் - தோமிலா தொளிருமதி வதனமுஞ் செங்கையிற் றொட்டவடி வெற்றிவேலுந், தங்குபொற் காறைமணி மாலைமுந் நூன்மார்புஞ் சதங்கையொலி சிற்றிடையு மாய்ச் - சதுமறைக ளிசைகழற் பதமுடன் மயிலின் மிசை தமியன்முன் றினமும்வருவாய், திங்களம் பிறை

நுதல் வள்ளிதெய்வானைமகிழ் சிவஞான யோகவடிவே-
சிந்துதிரை வாயிலுறு கந்தவரை மேவியருள் செந்தில்
வளர் குமரேசனே. (க)

சுரர்மிடிமை தீர்த்திடச் சரவணப் பொய்கையிற்
றோன்றிவிளை யாடியருளிச்-சுடர்விரிகை வேலினு லசு
ரர்குலம் வேரறச் சூரசம் மாரமாக்கி, வரமினிதளித்
துமச் சுரர்பதிக் குமரியை மணந்துபின் மால்வலக்கண்-
வந்தவதரித்ததொரு சுந்தரக் கயல்விழியின் வள்ளி
யைக் காதலித்துப், பரவுபவ மொழிபெருமை பெறு
பொருநை யின்றென்பா லலைவாய்க் கரைதனிற்-பண்பு
பெறு நவவீரர் போற்றவிப் புவிகாக்கும் படிவந்த
வினிய செவ்வேள்,திரிசுதந் தரவறவ ரீராயிரத்தர்புகழ்
சிவஞான யோகவடிவே -சிந்துதிரை வாயிலுறு கந்த
வரை மேவியருள் செந்தில்வளர் குமரேசனே. (உ)

மிக்கவிரி புவனங்க ளிற்சரா சரமதாய் மேவுபல பொ
ருள்கட்கெலா - மிகவளர் சிருட்டிதிதி சம்மார மெனு
மூன்று வேலையுள தெய்வமென்று,தக்கபுகழ் வேதன்மா
லரனைமறை பேசுமெனத் தரணியோ ரெடுத்துரைப்
பர் - தண்டுளப னுருவமுஞ் சங்கரன் வேடமுஞ் சதுர்
மறைக் கிறையுமாகி, இக்கலி யுகத்தினிற் கண்கண்ட

தெய்வமென வெல்லாஞ்செய் வல்லமூர்த்தி - இகபர மிரண்டிற்கு மேதுவாய் நின்றநீ இவ்வேழைக் கிரங்க லரிதோ, செக்கர்நேர் திருமேனி யறுமுகச் செல்வனே சிவஞான யோகவடிவே - சிந்துதிரை வாயிலுறு கந்த வரை மேவியருள் செந்தில்வளர் குமரேசனே. (ந)

கலியாரு மிவ்வுலகை யழியாத பொருளெனக் கருது மனம்வையி னனல்போற்-கண்டவிட மெங்கணு மேதே யையநின் கருணைமழை பொழியவில்லையாற், பொலி வாகி யுறுமதி வளிவழித் தூசிபோற் புலன்செல்வழி வழியதாகிப்-போக்குவர வாகியே பித்துக் குரங்காகிப் போகுமது வுண்மை கண்டாய்,வலியசூர்ப் பகைமுழுது முதலறக் களையவெழில் வயங்குகதிர் வேலெடுத்து-வானவர்கண் மிடிகெட நிசசரர்க ளுரமாற வந்தசிறு பால லோலா, சிலைவாள ருங்குமரி பெற்றுமகிழ் பாலனே சிவஞான யோகவடிவே-சிந்துதிரை வாயிலுறு கந்தவரை மேவியருள் செந்தில்வளர் குமரேசனே. (ச)

அறுமுகத் திறைவனே சரவணப் பொய்கைதனி லறுவரிடமாய் வளர்த்திட்-டரனருள வுமைவந்து கந்த னென் றன்பாலணைக்க விளையாடல்செய்து,குறுமுனிக் குபதேச மருள்செய்து புலவர்தம் குரவனென வேற் றல்பெற்று - குமரகுரு பரனெனு மூங்கைகவி பாட

வருள் கூர்ந்துகவி மாலைசூடி, சிறுமையுறு நக்கீரன்
றுயர்தொலைத் தவனிடுஞ் செய்யபாமாலை யேற்றுத் -
தேவரைச் சிறைநீக்கி யசுரர்தம் முதல்போக்கிச்
சேவற்பதாகை தூக்கி, செறுத்தணித் தாறுபடை
வீடுகந் தருள்பவா சிவஞான யோகவடிவே-சிந்துதிரை
வாயிலுறு கந்தவரை மேவியருள் செந்தில்வளர் கும
ரேசனே. (ரு)

அப்பனே செந்தில்வாழ் குமரனே முருகனே அய்ய
னே யெனவழைத்தா-லருளாத தேழைசொல் லம்பலத்
தேறுதென் னகிலமொழி பொய்க்குமென்றோ, ஒப்பி
லிருபுறமாதர் கட்கணைகளான்மன முடைந்தது கொல்
கடலலைக்கு-மோசையாலோகவிஞ ரோசையோ வலது
மறை யோதலாற் கேட்கவிலையோ, தப்புபல நேரினு நீ
பொறுத் தருளென்று தாய்முனுப சாரமொழிதல் -
சகசமோ வாயினு மாசையா லொருகோடி தரம்பணிந்
தே னெனரசே, சிப்பியொடு நவமணி திடரிடு முன்றி
லாய் சிவஞான யோகவடிவே - சிந்துதிரை வாயிலுறு
கந்தவரை மேவியருள் செந்தில்வளர் குமரேசனே. (சா)

அருவாகியுருவாகி யருவுருவ மாகியு மகண்டபரி பூர
ணமுமா-யனுதியா யாவுக்கு மப்பாலுக் கப்பாலி னுன
ந்த பூர்த்தியான,பிரமமாஞ் சிற்சோதி வடிவாகி நின்றநீ

பேசுமறை முடிவுதனிலும் - பிரகிருதியா மாயைதனே நீத்தமெய் யன்பர்பே ருளமுமுறை வையுன்றன், கருணையா மருள்சேரி னல்லாது சீவர்தாங் கடைத்தேற வகையுமுண்டோ - கட்கமழ் கடம்புபுனே பன்னிரு புயாசல கடைப்பிடித் தேனுனிருதாள், திருவுளமகிழ்ந்துநீயெனே யாளவருவையோ சிவஞானயோகவடிவே-சிந்துதிரை வாயிலுறு கந்தவரை மேவியருள் செந்தில் வளர் குமரேசனே. (எ)

ஆசையாம் பேயிருந் தாள்கின்ற பாழ்வீடு அனுதினங்கழுவாவிடி-லழுக்கோடு நீர்மல நிறைந்துமிகு துர்நாற்றமகலாப் புழுக்கூடதாம், வாசமனமொடுபுத்தி சித்தமாங்கார மிவைவாதாடு போர்க்களமிதை - வகுத்துமேனேக்கிடிற் றசைநரம் பென்புமுதல் வைத்திட்ட தோற்பை யிதில், நேசம்வைத் தென்னாளு மிரையினுக் குழல்வது நிசார்த்த நெறியென் றுவீணே - நெடுநாட் கழித்திட்ட புல்லறிவி ஞயேனு நின்கருணே பெறுவதென்னாள், தேசுவடி வேலேயணி சேவற் பதாகையாய் சிவஞான யோகவடிவே - சிந்துதிரை வாயிலுறுகந்தவரை மேவியருள் செந்தில்வளர் குமரேசனே. (அ)

கற்பனேகடந்த வோரானந்த வெள்ளமே கசடனேற் கருளவொருநாட் - காட்சிதர வந்தநா ளெந்தநா ளெந்த

நாள் கலிவிலகுநாள தன்றோ, முற்பவச்சஞ்சித மினி யெனைத்தொடராமன் முருக்கவருள் சமயமிதுவே - மோனமாயிதுகாறு நீயிருந்தது வினைகள் முற்றுந்தொலைக்கவென்றோ, தற்பரமதாஞ் சுப்ரமணியபால் பருகிடத்தாய் முகங்கண்ட வுடனே - தன்கையிற் பண்டமுஞ் சோரவிட் டோடுசிசுதான் பெறும்பேறு தருவாய், சிற்பரமருக்கு மோருபதேச குருவான சிவஞான யோகவடிவே - சிந்துதிரை வாயிலுறு கந்தவரை மேவியருள் செந்தில்வளர் குமரேசனே. (௯)

பத்தியறியாத வென்காட்சியிற் கெளிவந்தபாதமலர் தனைமறந்து - பலநாட்கழித்தபுன்கடையனைத் தும்பிபோற் பக்குவமுணர்த்தி யடியை, துத்தியஞ்செயவருளிமிடியுற்றகாலமென் தோன்றாததுணையுமாகி-தொல்பிணியெலாந்தீர்த்த ஞானபண்டித வுனது துணையடிகடினமும் வாழி, முத்திநெறி யீதெனச் சற்று நெறியறியாத மூர்க்கனுக் குனதுகருணை-முதிர்தருகடாட்சவீட்சணமருளலருமையோ முருகனே யுளமிரங்காய், சித்தர்முதனித்யமுஞ் சுத்தமொடுபத்திபுரி சிவஞான யோகவடிவே - சிந்துதிரை வாயிலுறுகந்தவரை மேவியருள் செந்தில்வளர் குமரேசனே. (௰)

முற்றிற்று.